# களை ஒரு மலர்

# ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர்

## வாழ்க்கை வரலாறு





ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் பிறந்த பொழுது பல விஷயங்கள் அவருக்கு எதிராக இருந்தன. உடல் நலம் சரியில்லாத, வலுவற்றச் சிறு குழந்தையாகப் பிறந்தார். தந்தையை இழந்திருந்த அவரையும் அவர் சகோதரர் ஜேம்சையும், அவரது தாய், தனியாக வளர்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இதை எல்லாம் விட மோசம், அவர் அடிமைகளின் மகனாகப் பிறந்தார். ஒரு நல்ல எதிர்காலத்திற்கான நம்பிக்கை சுத்தமாக இல்லை!

ஆனால் ஜார்ஜ் வாஷிங்டன் சாதாரண மனிதரல்ல. தீமையை நன்மையாகவும், நம்பிக்கையின்மையை நம்பிக்கையாகவும், வெறுப்பை அன்பாகவும் மாற்றியவர். தன் மக்களுக்கும் தன்னைச் சுற்றியிருக்கும் உலகத்திற்கும் உதவி செய்யவே தன் முழு வாழ்வையும் அற்பணம் செய்தவர்.
இது அவருடைய கதை.

ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் 1860ஆம் ஆண்டில் மிசௌரியில் பிறந்தார் - நூறு ஆண்டுகளுக்கும் முன்பு. அது ஒரு பயங்கரமான காலம். இழிய மனிதர்கள் இரவு நேரத்தில் சத்தமில்லாமல் சென்று, அடிமைகளை அவர்கள் எசமான்களிடமிருந்துக் கடத்தினார்கள். தடுக்க நினைத்தவர்களுக்குக் கடும் தீங்கு விளைவித்தார்கள்.

ஓரிரவு, இத்தகைய கும்பல் ஒன்று, ஜார்ஜ் மற்றும் அவர் தாய் மேரி அடிமைகளாக இருந்த மோசஸ் கார்வரின் பண்ணைக்கு வந்தார்கள். வீட்டிலிருந்த அனைவரும் பயந்து ஓடினார்கள். ஆனால் மேரி அவர் குழந்தையுடன் ஒளிந்துக் கொள்வதற்குள், அந்த கும்பல் அவர்கள் இருவரையும் கடத்திக் கொண்டு இரவின் இருட்டிற்குள் மறைந்தனர்.

மோசெஸ் கார்வர் அவர்களைக் கண்டுபிடிப்பதற்கு ஆள் அனுப்பினார். ஆனால் மேரியை அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. சில நாட்களுக்குப் பிறகு, குதிரையின் சேணத்திற்குப் பின் மேல்சட்டையால் கட்டிய சிறு மூட்டையுடன் அந்த ஆள் திரும்பி வந்தார். அந்த முட்டையில் இருந்ததுதான் இளம் குழந்தையான ஜார்ஜ்.

மோசெசும் அவரது மனைவி சூசனும் மேரியின் குழந்தைகளை வளர்த்தனர். இப்பொழுதும் ஜார்ஜ் வலுவில்லாத சிறிய குழந்தையாகவே இருந்தார். ஆனால் அவர் வளர வளர அவரொரு வித்தியாசமான குழந்தை என்பதைக் கண்டார்கள். அவரைச் சுற்றி இருக்கும் எல்லாப் பொருட்களைப் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்பினார். மழையைப் பற்றியும், பூக்களைப் பற்றியும், பூச்சிகளைப் பற்றியும் கேட்டார். மோசெஸ் கார்வர் பதில் சொல்ல முடியாத அளவுக்குக் கேள்விகள் கேட்டார்.



இளம் வயதில், ஜார்ஜ் ஒரு தோட்டம் வைத்திருந்தார். அங்கே தினமும் மணிக்கணக்காக அவருடையச் செடிகளை கவனித்துக் கொண்டிருப்பார். செடிகள் சரியாக வளரவில்லை என்றால் அதற்கான காரணத்தைக் கண்டுபிடித்தார். அதன் பிறகு, செடிகள் செழிப்பாக வளர்ந்து பூத்துக் குலுங்கின. பனிக்காலத்தில் செடிகளை மூடி வைத்துப் பாதுகாத்தார். இளவேனில் காலத்தில் புது விதைகளை விதைத்தார். ஒவ்வொருச் செடியையும் தோட்டத்தில் இருக்கும் ஒரே செடியைப் போல எண்ணி கவனமாகப் பார்த்துக்கொண்டார். பக்கத்து வீட்டுக்காரர்கள் ஜார்ஜிடம் அவர்கள் செடிகளைப் பற்றி ஆலோசனைக் கேட்கத் தொடங்கினார்கள். அவரை 'செடி வைத்தியர்' என்று அழைத்தார்கள்.





நாட்கள் கடந்து செல்ல, ஜார்ஜ் மேலும் பல பல விஷயங்களைப் பற்றி வியப்புடன் யோசிக்கத் தொடங்கினார். கல்வி ஆர்வம் கொண்டு பள்ளிக்குப் போக வேண்டும் என்று ஏங்கினார்.

இதற்கு இடையில், அடிமைகளாக இருந்த நீக்ரோ மக்கள் அனைவரும் விடுதலைப் பெற்றார்கள். ஆனால், அருகிலிருந்த எந்தப் பள்ளியிலும் நீக்ரோக்களுக்கு அனுமதி அளிக்கப்படவில்லை. ஆதலால், பத்து வயது சிறுவனான ஜார்ஜ், தன் சகோதரன், தோட்டம், கார்வரின் பண்ணை ஆகிய அனைத்தையும் விட்டுவிட்டு, தன் கேள்விகளுக்கான பதில்களைத் தேடிக் கிளம்பினார்.



ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் எங்கெல்லாம் பள்ளி இருந்ததோ அங்கெல்லாம் தங்கினார். அங்கிருக்கும் மக்களுக்கு வேலை செய்துப் பிழைத்தார். தரையைத் தேய்த்தார்; துணிகளைத் துவைத்தார்; பிரெட் சுட்டு வேகவைத்தார; எதைச் செய்தாலும் சிறப்பாகச் செய்தார். ஒரு சிறிய வேலையைக் கூட ஜார்ஜ் அதிகமான முக்கியத்துவம் கொடுத்துச் செய்தார்.

சிலபேர் ஜார்ஜை தங்கள் மகனாக எண்ணி ஏற்றுக் கொண்டார்கள். முதலில் அவருடைய பெற்றோர் போல் இருந்த மரியா மற்றும் ஆண்டி வாட்கின்ஸ் ஆகியோருடன் தங்கினார். பிறகு அவர் கன்சாஸ் சென்று லூசி "அத்தை" மற்றும் செய்மோர் "மாமா"வுடன் இருந்தார். உதவும் பண்புள்ள இந்த அமைதியான சிறுவனிடம் அவர்களும் மிகுந்த அன்பு கொண்டார்கள்.



கல்லூரி செல்வதற்குப் பணம் சேர்க்க ஜார்ஜ் நிறைய வருடங்கள் கடுமையாக உழைத்தார். உதவி செய்வதற்குப் பெற்றோர்கள் இருந்த மற்ற மாணவர்களுக்கு, அவரை விட மிக விரைவில் கல்லூரி செல்ல வாய்ப்புக் கிடைத்தது. முப்பது வயதான பிறகுதான் ஜார்ஜிடம் போதுமான அளவு பணம் சேர்ந்தது. அதன் பிறகும் அவரது பாதை எளிதாக இல்லை. பணம் இருந்த போதும், பல கல்லூரிகள் நீக்ரோக்களுக்கு அனுமதி கொடுக்கவில்லை.

ஆனால் ஜார்ஜ் மனம் தளரவில்லை. அயோவா சென்று, அவரைப் போன்ற நீக்ரோ மாணவனுக்கு விருப்பத்துடன் உதவி அளித்த கல்லூரி ஒன்றை கண்டுபிடித்து, அங்கே அனுமதிப் பெற்றார்.

கல்லூரியிலும் ஜார்ஜ் தொழில் செய்வதைத் தொடர்ந்தார். அவரது சக மாணவர்களின் துணிகளைத் துவைப்பதற்கான சலவைத் தொழில் ஒன்றைத் தொடங்கினார்.

அதனுடன் தொடர்ந்து பாடங்களையும் படித்தார். மிக விரைவில் அவருடைய ஆசிரியர்களும் சக மாணவர்களும் அவரது அளவுகடந்த திறமைகளைப் பற்றிப் புரிந்து கொண்டார்கள். பியானோ வாசித்தார், அழகாகப் பாடல் பாடினார், சிறப்பான ஓவியனாக திகழ்ந்தார். சில காலத்துக்கு, ஓவியனாகலாம் என்று கூட அவர் எண்ணினார்.



மேலும் மேலும் யோசிக்க, மக்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணமே ஜார்ஜிற்கு அதிகமாயிற்று. அப்பொழுது, அவர் ஊரில் அவரை அனைவரும் 'செடி வைத்தியர்' என்று அழைத்தது நினைவில் வந்தது.

செடிகள் மீதிருந்த அன்பை அவர் என்றும் மறக்கவில்லை. பல வருடங்களாக, பல இடங்களாக அலைந்த பொழுதும், அவர் அறையில் எப்பொழுதும் ஏதாவது செடி இருக்கும்.
ஆதலால், ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் வேளாண்மை பயில முடிவெடுத்தார். செடிகளைப் பற்றியும், பூக்களைப் பற்றியும், மண்ணைப் பற்றியும் கற்றுக் கொண்டார். களைகளின் பெயர்களைக் கூட அவர் கற்றுக் கொண்டார். களைகளும் அவருக்கு முக்கியமாகவேப் பட்டன. அவர் அடிக்கடிக் கூறுவது: "களையும் ஒரு மலர். தவறான இடத்தில் வளர்கின்ற மலர்".

இப்பொழுது கூட அவர் கேள்விகள் கேட்டுக் கொண்டே இருந்தார். எந்த மனிதனாலும் புத்தகத்தாலும் பதில் அளிக்க இயலாவிட்டால், அவரே பதில்களை கண்டுபிடித்தார். தன் செடிகளைக் கொண்டு பரிசோதனைகள் செய்து, யாருக்கும் தெரியாத இரகசியங்களை கண்டுபிடித்தார்.



கல்லூரி முடித்தப் பின்பு ஜார்ஜ் ஆசிரியரானார். அலபாமாவில் இருந்த கல்லூரி ஒன்றில், நீக்ரோ மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்க அவரது திறமை அவசியமாக இருந்ததால், அவர் அங்கே அழைக்கப்பட்டார். அங்கே, டுஸ்கெஜீ நிறுவனத்தில் ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் அவரது வாழ்க்கையை அமைத்தார்.

அலபாமாவில், பேராசிரியர் கார்வர் தன் மாணவர்களுக்கும், அங்கு மண்ணைக் கொண்டு பிழைப்பு நடத்திய ஏழை விவசாயிகளுக்கும் வேளாண்மை கற்பித்தார். தங்கள் செடிகளை நன்றாக விளையச் செய்வது எப்படி என்று சொல்லிக் கொடுத்தார்.



அங்கிருக்கும் அதிகபட்ச விவசாயிகள் பஞ்சு பயிரை வளர்த்தி வந்தனர். அனால், மழையாலும் பூச்சிகளாலும் பயிர்கள் சில சமயம் அழிக்கப் பட்டதால், அவர்கள் உண்பதற்கு தேவையான வருமானம் இல்லாமல் சிரமப்பட்டனர்.

பேராசிரியர் கார்வர் வேறு பயிர்களும் வளர்க்குமாறு விவசாயிகளுக்கு அறிவுரை கூறினார். சக்கர வள்ளி கிழங்கும் வேர்க்கடலையும் சுலபமாக வளர்க்கக் கூடிய நல்ல பயிர்கள். வெறும் பஞ்சை மற்றும் வளர்ப்பது மண்ணை பாதிக்கும் என்பதை எடுத்துச் சொன்னார். ஒவ்வொரு வருடமும் பல விதமான பயிர்களை நடுவதே சிறந்த நடைமுறை என்றார்.

ஆனால் விவசாயிகள் அவரது ஆலோசனையை கேட்க விரும்பவில்லை. சக்கரை வள்ளி கிழங்கும் வேர்க்கடலையும் நடுவதற்கு பயந்தனர். அவற்றை யாரும் வாங்க மாட்டார்கள் என்று நம்பினார்கள்.



ஆனால் பேராசிரியர் கார்வர் அவரது ஆய்வகத்தில் பரிசோதனைகள் செய்திருந்தார். சர்க்கரை வள்ளி கிழங்கைக் கொண்டு பல்வேறு பொருட்களை உற்பத்தி செய்ய முடியும் என்பதை கண்டறிந்திருந்தார். சோப்பு, காபி மற்றும் கஞ்சி தயாரித்தார். நூற்றுக்கும் மேலான பொருட்களை அவர் செய்தார்.

அந்த காலத்தில் வேர்க்கடலையை 'குரங்கு உணவு' என்று மக்கள் கூறிய போதும், மக்களுக்கும் அது ஏற்றது என்று பேராசிரியர் கார்வர் கூறினார். அது மட்டும் இல்லாமல், வேர்கடலையைக் கொண்டு உற்பத்தி செய்யக் கூடிய மேலும் பல பொருட்களை அவர் கண்டுபிடித்தார்: காகிதம், மை, சவரக்குழைவு, குழம்பு வகைகள், லினோலியம்..ஏன், பால் கூட! மொத்தத்தில் முன்னூறு வகையான பொருட்களை அவர் வேர்க்கடலையிலிருந்து உருவாக்கினார்.

ஒரு முறை, டுஸ்கேஜீயிற்கு முக்கியமான விருந்தினர்கள் வந்தபொழுது, டாக்டர் கார்வர் அவர்களுக்கான உணவுப்படியலை தேர்ந்தெடுத்தார். விருந்ததினர்கள் அமர்ந்து தங்களுக்கு பரிமாறப்பட்ட சூப், பிரட், பாலாடையுடன் செய்த ஒரு விதமான போலி கோழி வகை, சாலட், காபி, மிட்டாய், கேக் மற்றும் ஐஸ் கிரீம் ஆகியவற்றை ரசித்து உண்டனர். விருந்தில் அளிக்கப் பட்ட அனைத்து உணவு வகைகளும் வேர்கடலையால் தயாரிக்கப் பட்டவை என்பது பிறகுதான் அவர்களுக்குத் தெரிய வந்தது. அவர்களது அளவிலா ஆச்சரியத்தை நீங்களே கற்பனை செய்து பார்க்கலாம்!



கொஞ்சம் கொஞ்சமாக விவசாயிகள் ஜார்ஜ் வாஷிங்டன் கார்வரின் பேச்சைக் கேட்க ஆரம்பித்தார்கள். வேர்க்கடலை மற்றும் சக்கரை வள்ளி கிழங்கை வளர்த்தனர். மிக விரைவில், இவை இரண்டும் அலபாமாவின் மிக முக்கியமான பயிர்களாக மாறின.



கூடிய சீக்கிரத்தில் டாக்டர் கார்வரின் சாதனைகள் நாடு முழுவதும் பரவியது. பிரதமர்களும் முக்கியமான தலைவர்களும் அவருக்கு மரியாதை செலுத்தினார்கள். விவசாயிகளும் விஞ்ஞானிகளும் அவருடைய ஆலோசனையைக் கோரி அனுப்பிய விண்ணப்பங்களால் அவரது தபால் பேட்டி தினமும் நிறைந்து வழிந்தது. அவருக்கு வழங்கப்பட்ட பெரும் பணத்தொகைகளை அவர் மறுத்து விட்டார். பணத்தை அவர் பெரிதாகக் கருதவில்லை. அவருக்கு வந்த காசோலைகளைக் கூட அவர் பயன்படுத்தவில்லை.

ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர் வாழ்கை முழுதும் பிறரிடம் இருந்து எதையும் கேட்கவில்லை. பிறருக்கு உதவி செய்யவே நினைத்தார். தனியாக வாழ்ந்து தனது தேவைகளை அவரே பார்த்துக்கொண்டார். தன் துணிகளை அவரே துவைத்துத் தைத்து அணிந்து கொண்டார். தானாக தயாரித்த சோப்பை பயன்படுத்தினார். தானாக விளைத்த உணவை உண்டார்.



உலகமெங்கும் அவரை மேடையில் உரையாற்ற அழைத்தபோதும், டாக்டர் கார்வர் பெரும்பாலும் டுஸ்கேஜீயை விட்டு எங்கும் போகவில்லை. அவருக்கு அங்கே செய்வதற்கு நிறைய வேலைகள் இருந்தன. ஓவியம் வரைவதை தொடர்ந்தார். தன் கிரீன்ஹவுசிலும் ஆய்வகத்திலும் பணியாற்றி, பல விஷயங்களை கண்டறிந்தார். செடிகளிலிருந்து சாயங்களையும், அலபாமாவின் களிமண்ணிலிருந்து வண்ணங்களையும் தயாரிக்க முடியும் என்பதை கண்டுபிடித்தார்.

எண்பதுக்கும் மேலான முதிய வயதிலும், டாக்டர் கார்வர் தொடர்ந்து வேலை செய்தார். ஒவ்வொரு இரவும், ஊர் உறங்கிய பின்பு கூட, அவர் வீட்டு ஜன்னலில் வெளிச்சம் எரிந்து கொண்டிருக்கும்.



எதிர்காலத்திற்கு நம்பிக்கையே இல்லாமல் பிறந்த ஒரு குழந்தை, பிற்காலத்தில் நாட்டின் மிகச் சிறந்த விஞ்ஞானியாகத் திகழ்ந்தார். ஜார்ஜ் வாஷிங்டன் கார்வர், அவரது நற்குணத்தாலும் ஈடுபட்டாலும், அவருடைய மக்களுக்கு மட்டுமல்லாமல், உலகத்துக்கே பேருதவி செய்து சாதனை படைத்தார்!



**சுபம்**